"சிகரமுகத்திற்றிரளாரகிலும்மிகவுந்திவருநிவவின்கரைமேல்
நிகரின்மபிலாரவர்தாம்பயிலுநெல்வாயிலரத்துறைநின்மலனே
மகரக்குழையாய்மணக்கோலமதேபிணக்கோலமதாம்பிறவியிதுதான்
அகரமுதலினெழுத்தாகிநின்றாயடியேனுய்யப்போவதொர்சூழல்சொல்லே"

(சுந்தரர் தேவாரம்.)

என்பதனுள், 'அகரமுதல்' என்பதிலுள்ள முதல் என்பதற்குப் பொரு ளென்னை?

"ஒப்புயர்வற்றதொரு நூலைத் தமிழ்மொழியிற் செய்யப்புகுந்த தமிழ்ப்புலவனான தமிழ்மகனொருவன் தன்னூலின் முதற்பாவின் கண்ணே ஆரியச்சொற்கள் இரண்டைப் புகுத்தானென்றல் சைவசமயத்தைப் போதிக்கப்புகுந்த சைவவொழுக்கமுடைய சைவமகனொருவன் புலாலுண்டான் என்றலை யொக்கும்" என அவ்வுரை புகலுகின்றது.

இவ்வுவமை பொருத்தமுடையதா? வள்ளுவனார் தமிழைப் போதிக்கப்புகுந்தனரா? அறமுதலியவற்றைப் போதிக்கப்புகுந்தனரா?

'சைவன்' என்பது புலாலுண்ணாதவனையே யுணர்த்துமா? உணர்த்துமெனின், வைணவரிற் சிலர் புலாலுண்ணவில்லையென்றால் அவர் சைவராவரா? புத்தர் சைவராவரா? சிவசம்பந்தம் உடையவன் சைவன் எனின் புலாலைத் தானும் உண்டு இறைவனும் உண்ணுமாறுசெய்த கண்ணப்பர் சைவராகாரா? அவர் சைவசமயத்தைப் போதிக்கப்புகுந்தவ ரல்லரெனின், வள்ளுவனாருந் தமிழைப்போதிக்கப்புகுந்தவரில்லையெனக் கூறலாமல்லவா?

முதற்பாவின்கட் கூறாரென்றால் மற்றையபாவின்கட் கூறினாற் குற்றமில்லையா? அறத்துப்பால் முதலிய மூன்றுபால்களிலு முள்ள பாக்களிற் பல வடமொழிப்பதங்கள் விரவிநிற்றலை எவரும் அறிவர். தமிழையே போதிக்கப்புகுந்த தமிழ்மகன் அங்ஙனந்தான் பாடலாமா?

ஆரியச்சொற்க ளிரண்டைப் புகுத்தலாகாதெனின், ஒன்றைப் புகுத்தியிருப்பின் நன்றுபயக்குமா?

வள்ளுவனாரைத் தமிழ்ப்புலவன என்றல் பொருந்தும்; தமிழ்மகன் என்றே சாதிக்கமுடியுமா? தமிழ்ப்புலமைபடைத்துத் தமிழில் நூல் இயற்றும்வன்மை ஒரு ஆங்கிலேயருக்கும் அமையுமல்லவா?

தமிழ்நாட்டிற் பிறவாது அயல்நாட்டிற்பிறந்த வீரமாமுனிவரைத் தேம்பாவணி யென்னுந் தீங்காவியம் முதலிய பல தமிழ்நூலியற்றிய செந்தமிழ்ப்புலமைகொண்டு நந் தண்டமிழ்நாட்டிடைப்பிறந்த தமிழ் மகன் எனலாமா?

தமிழ்ப்புலமையெய்தியோன் தமிழ்மகன்தான் எனின் ஆரியப் புலமையும் அவனுக்குண்டாயின் அவன் ஆரியமகனுமாவனன்றோ? தமிழ் மகன் என்றே கூறமுடியுமா? வள்ளுவனார்க்கு ஆரியப்புலமை இல்லை யென எங்ஙனங் கூறலாம்?

முதல் இடை கடை யெனப்படும் தமிழ்ச்சங்கத்தைத் தமிழை வளர்ப்பதற்கல்லவா நிலைநிறுத்தினார்கள்? அவற்றிலமர்ந்து தமிழை யாராய்ந்த புலவரும் தமிழர்தாமே? இங்ஙனமெலாமாக அக்கழகத் திற்குச் சங்கமென வடமொழிப்பெயரையிட்டது எதனோடொக்கும்? அவர்கள் வடமொழிப்பெயரை இட்டது பொருந்துமா?

பிரகத்தனைத் தமிழறிவுறுத்தற்குக் குறிஞ்சிப்பாட்டுப் பாடிய கபிலர் அக்கழகத்திலுள்ளவர்தானே? "ஆரியநன்று தமிழ்தீது" என வுரைத்த வேட்கோவனைச் சிறிச் சபித்த நக்கீரனார் அக்கழகத்தினர் தானே?

"'உலகு' என்னும் சொல்லும் தமிழ்ச்சொல்லென நாட்டமுடி யாது" என அவ்வுரை பகர்கின்றது.

தமிழ்ச்சொல்லல்லாத உலகென்பதைத் தமிழ்ப்புலவராய சேக் கிழார், கம்பர், நக்கீரர், கூலவாணிகன்சாத்தனார் முதலியோர் 'உல கெலாம்' 'உலகமியாவையும்' 'உலகமுவப்ப வலனேர்புதிரிதரு' 'உலகந் திரியா வோங்குயர் விழுச்சீர்' என் றிங்ஙனம் முதற்பாவின்கண்ணும் முதலடியின்கண்ணும் முதற்சீரின்கண்ணுங் கூறுவரா?

இங்ஙனங் கூறியது, சைவமகன் புலாலுண்டான் என்பதொடு ஒக்கு மல்லவா? இவ்வுலகென்னுஞ் சொல்லையுடைய முதற்பாக்களும் முத லடிகளும் வேறு யாரோ பாடிவிட்டார் எனக் கூறலாமா?

மங்கலச்சொல்லாயிருத்தலிற், கூறினாரெனின், தனித் தமிழ்ச் சொல்லான மங்கலச்சொல் வேறு தமிழி லில்லையா? "நமச்சிவாய வாழ்க நாதன்றாள்வாழ்க" இம் முதற்பாட்டு முதலடியில் உள்ள நமச்சிவாய,

நாதன் என்பன வடமொழிப் பதங்கள் தானே? இத் திருவாசக ஆசிரியர் தமிழ்ப்புலவர்தானே? இங்கு வந்துள்ள நமச்சிவாய என்பதும், நாதன் என்பதும் முன்கூறிய சங்கம் என்பதும் தமிழ்ச்சொற்களே யாம் எனக் கூறின், ஆதி பகவன் என்பவற்றைத் தமிழ்ச்சொற்கள் எனச் சாதிக்கப் புகுவாருடன் தாமு மொருவராக நேரவருமல்லவா?

"பிறப்பு என்னும் வாய்பாட்டுச் சொல் ஒற்றில்லாமல் வெண்பாவின் இறுதிச் சீராக முடிந்து வருவது வழக்காயினும் அவ்வாறு அச்சீரில் வெண்பா முடிவது அவ்வளவு சிறப்பன்று" என அவ்வுரை புகல்கின்றது.

சிறப்பின்மைக்குக் காரண மென்னை? உலகு என வல்லொற்று இடையில் இல்லாததனலா? ஆமெனின் 'பொன்போற் போதிந்து' என மெல்லொற்று இடையில் வருவது சிறப்புடையதாமா?

இங்கு வந்துள்ள 'உலகு' என்னும் வாய்பாடு சிறப்புடையதன்றாயின்,

"பகைநட்பாக் கொண்டொழுகும் பண்புடை யாளன்
றகைமைக்கட் டங்கிற் றுலகு"
"விடாஅர் விழையு முலகு"

என இறுதிச் சீராய் வந்து முடிந்துள்ள 'உலகு' என்பதும், 'அவ்வளவு சிறப்பில்லை' யென்பதற் கிலக்காகாதா?

"பொன்றுமை யொன்ற லரிது" "பூரியர்க ளாழு மளறு" என்பன போன்றவும் அங்ஙனம் வந்துள்ளமையாற் சிறப்பில்லை யென்றும் ஆதலால் இக்குறட்பாக்களும் வள்ளுவனாற் செய்யப்படவில்லை யென்றும் சொல்ல இடந்தராவா?

"மெய்ப்பொருள் 'மெய்யுணர்தல்' என்னும் அதிகாரக்குறள் பத்திலும் அவ்வாறு உயர்திணை ஆண்பாலாகக் கூறப்பட்டிலது. அஃறிணை யொன்றன்பாலாகக் கூறப்பட்டுளது. திருவள்ளுவர் தொல்காப்பியத்தை இலக்கணமாகக் கொண்டவரென்பது புலவர்பலர்க்கும் ஒப்பமுடிந்ததொன்று." என அவ்வுரை புகல்கின்றது.

ஆண்பாலாகக் கூறவில்லையென்பது நியாயமே. புலவர் பலர்க்கும் ஒப்பமுடிந்ததொன்றாயின் அஃது நன்றெனக்கொள்ளப்படுமென்றால்

இப்பாயிரமும் வள்ளுவனார்செய்ததென்பது புலவர் பலர்க்கும் ஒப்ப முடிந்ததொன்றுதானே? அங்ஙனமாக வள்ளுவனார்கூறவில்லையென மறுக்க முற்படுவானேன்?

'துறவு' என்னும் அதிகாரத்தில் "பற்றுகபற்றற்றான்பற்றினை" என்பது வந்துளது. ஈண்டுப் பற்றற்றான் என்னும் பொருள் மெய்ப்பொருளா? வேறுபொருளா? மெய்ப்பொருளெனின் ஆண்பாலாகவும் கூறப்பட்டுளதே? வேறுபொருளெனிற் காரணந் தருக.

"உயர்திணை யென்மனார் மக்கட் சுட்டே
அஃறிணை யென்மனா ரவால பிறவே"

எனத் தொல்காப்பியர் மக்களல்லாத பிறபொருளையுணர்த்தும் சொல்லெல்லாம் அஃறிணையாக ஒலிக்கும் எனக் கூறுகின்றார். இத்தொல்காப்பியத்தை இலக்கணமாகக்கொண்ட திருவள்ளுவர் மெய்ப்பொருளை ஆண்பாலாகக்கூறுவரா? அவ்வாறுகூறினா லஃது தோ ரிழுக்காகாதா?" என அவ்வுரை வினவுகின்றது.

"அவியுணவினான்றார்" "தேவரனையர் கயவர்" "வகுத்தான் வகுத்த வகையல்லால்" "பரந்து - கெடுக வுலகியற்றி யான்" எனத் தொல்காப்பியத்தை இலக்கணமாகக்கொண்டவர் மக்களல்லாத பொருளை உயர்திணை வாய்பாட்டாற் கூறியது இழுக்காதா? அன்றிப் 'பற்றற்றான்' என மெய்ப்பொருளைக் கூறியதும் இழுக்காகாதா?

"பெண்மைசுட்டியவுயர்திணமருங்கின்
ஆண்மை திரிந்தபெயர்நிலைக்கிளவியும்
தெய்வஞ்சுட்டியபெயர்நிலைக்கிளவியும்
இவ்வென அறியும் அந்தந்தமக்கிலவே
உயர்திணமருங்கிற்பால்பிரிந்திசைக்கும்"

என்னும் இது தொல்காப்பியச்சூத்திரந்தானே? மக்களல்லாத பிற பொருளையுணர்த்தும் சொல்லனைத்தும் அஃறிணைவாய்பாடாகத்தான் ஒலிக்கும் என்று இச்சூத்திரத்தை அறிந்த புலவர் போதிக்கப்புகுவரா?

"வினையினீங்கிவிளங்கியவறிவின்
முனைவன்கண்டது முதனூலாகும்"

என்பதும் தொல்காப்பியச்சூத்திரந்தானே? இதனுள் 'முனைவன்' என்றது மெய்ப்பொருளையா? வேறு பொருளையா? மெய்ப்பொருளன்

றென அறிவுடையோர் ஒப்புக்கொள்வரா? ஈண்டும் உயர்திணைவாய் பாட்டாற்றானேகூறியுள்ளார். இங்ஙனமாக வள்ளுவனார் ஏன் உயர்திணை வாய்பாட்டாற் கூறமாட்டார்?

இன்னும், தொல்காப்பியர் 'மாயோன்' 'சேயோன்' 'வேந்தன்' 'வருணன்' எனவும் உயர்திணைபாகக் கூறியிருக்கின்றாலல்லவா?

" மடியிலா மன்னவ னெய்து மடியளந்தான்
றாஅய தெல்லா மொருங்கு "

" தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்க லானென்றாங்
கைம்புலத்தா றோம்ப றலை "

" செவியுணவிற் கேள்வி யுடைய ரவியுணவின்
ஆன்றாரோ டொப்பர் நிலத்து "

என வள்ளுவரே பிறாண்டுங் கூறியது பொருந்தியதா? அன்று?

" ஒருமைக்கட் டான்கற்ற கல்வி யொருவற்
கெழுமையு மேமாப் புடைத்து "

" எழுமை எழுபிறப்பு முள்ளுவர் தங்கண்
விழுமந் துடைத்தவர் நட்பு "

" ஆபயன் குன்று மறுதொழிலோர் நூன்மறப்பர்
காவலன் காவா னெனின் "

" தம்பொரு ளென்பதம் மக்கள் அவர்பொருள்
தந்தம் வினையான் வரும் "

" ஆவிற்கு நீரென் றிரைப்பினு நாவிற்
கிரவி னிழிவந்த தில் "

என்னுங் குறட்பாக்களையும் இவைபோன்ற குறட்பாக்களையும் நடுவாக நின்று ஆராயின் வள்ளுவனார் எம்மதத்தினரெனச் சொல்லப்படுவார்?

திருமால் உலகத்தை அளந்தான் என்றல் புத்தர் முதலியோர்க் குடம்பாடாகுமா?

இல்லறத்தான் ஐம்புலத்தும் செய்வனசெய்யவேண்டு மென்பது அருகர்முதலியோர்க் குடன்பாடா? தென்புலத்தாரை அவர் அங்கீகரிக் கின்றாரா? தேவர்க்கு வேள்வியில் அவியிடுதலும் தேவர் அவியினை உண்ணுவதும் அவர்க்குடம்பாடா? வேள்வியை அவர்வெறுக்கவில்லையா?

மறுபிறப்பில்லையென்னும் மதத்தினருக்குக் கல்வி யெழுமையும் செல்லுமென்பதும், விழுமம் துடைத்தவர்நட்பு எழுமையெழுபிறப்பும் உள்ளுவரென்பதும், தம்மக்க ளீட்டியபொருள் தந்தம் வினையான்வரு மென்பதும், இவைபோன்றுவரும் இன்னும் பல விடயங்களும் உடம்பா டாகுமா?

ஆறுதொழில் புத்தர் முதலியோர்க் குடன்பாடா? ஆகாத்தோம் பல் பேறமென்பது முகம்மதியர் முதலியோர்க்கு உடன்பாடாகுமா?

இங்ஙனமிருக்க, வள்ளுவனார் எல்லாமதத்தினருக்கும் பொதுவாக நூலியற்றியுள்ளாரென்றல் பொருந்துமா?

"வாலறிவன் என்பதன் பொருள் தூய அறிவினையுடையவன் என் பதே. ஆகவே, தூய அறிவு ஒன்று, அதனையுடையவன் ஒருவன், அதனை யுடைமையாகக்கொண்ட தொழில் ஒன்று என்ற இருபொரு ளுண்மையும் ஒருதொழிலுண்மையும் பெறப்படுகின்றன. இவ்வுண் மைப்பேறு மெய்ப்பொருளொன்றுதவிர வேறுபொருள் ஒன்றுமில்லை யென்னும் கொள்கைக்கு முரண்படுகின்றதன்றோ?" என்னுந் தொட ரும் அவ்வாராய்ச்சியிலுள்ளதே.

அறிவு, பொருளெனற் கேற்புடையதாகத் தொழில் பொருள் எனற்கு ஏன் ஏற்புடையதன்றாயிற்று? தொழிலையும் சேர்த்து 'முப் பொருளுண்மை பெறப்படுகின்றன' என எழுதினால் வரும் குற்ற மென்னை?

மெய்ப்பொருள் ஒன்றைத்தவிர வேறுபொருள் இல்லை யென்னுங் கொள்கை வள்ளுவனார்கொள்கையா? பிறர்கொள்கையா? வள்ளுவனார் கொள்கையெனில் முப்பொருளுண்டு எனக்கூறுவோர்க்குரிய நூலன்றாய்ப் பொது நூல் என்னுங் கொள்கையைப் போக்கிவிடுமே?. பிறர்கொள்கை யெனினும் எல்லார்க்கும் ஒப்ப நூலியற்றியவர் 'பற்றுக பற்றற்றான்' எனவும் "ஓர்த்துள்ளம் உள்ளது உணரின்" எனவுங் கூறலாமா? பற்றற்றான் என்றால் பற்றின்மை ஒன்று அவ்வின்மையையுடையான் ஒருவன என இருபொருளுண்மை பெறப்படாதா? உள்ளது என்றால் உண்மையொன்று, அதனையுடைய பொருள் ஒன்று என இருபொரு ளுண்மை பெறப்படாதா? பெறப்படின் ஒன்றே பொருளென்போர்க்கு முரண்படாதா? முரண்படிற் பொதுநூல் எனப் புகல்வாரெவரோ?

"கல்வியின்பயன்களுள், கடவுளைத் தொழுதல் சிறந்ததொருபயன் என்று சொல்லலாமேயன்றிக் கல்விக்குப் பயன் கடவுளைத்தொழுதல் ஒன்றே என்று எவ்வாறு சொல்லலாம்; உலக அறிவு நல்லொழுக்கம் முதலிய கல்வியின் பயன்களல்லவா? கற்றான் ஒருவன் கடவுளறிவொன்று தவிர மற்றைய அறிவுகளெல்லாவற்றையும் கைக்கொண்டு நிற்பனேல் அவன் கற்றதனால் யாதொருபயனையும் அடைந்திலன் எனக் கூறலாமா?" என வரும் வினாக்களும் அவ்வுரையிற் காணப்படுகின்றன.

இவ்வினாவைக்கொண்டே கல்விக்குச் சிறந்தபயன் கடவுளைத் தொழுதல் என்பதும் உலகஅறிவுமுதலியன சிறவாதபயன்கள் என்பதும் ஆராய்ச்சியாளா துட்கோளாமென அறியலாம். ஒரு பொருளா லடையத்தக்க சிறந்தபய னிருக்க அதனை யடையாது சிறவாத பயன்களை யடைதல், ஒரு பயனடைவாகுமென அறிவுடையோர் கருதுவாரா?

இக்குறட்பாவில் இவ்வளவு வினாக்கள் எழுமாயின் "இருந்தோம்பி யில்வாழ்வ தெல்லாம் விருந்தோம்பி-வேளாண்மை செய்தற் பொருட்டு" என்னும் குறட்பாவுள் இருந்தோம்பியில்வாழ்வதெல்லாம் விருந்தோம்பல் ஒன்றற்கு என்றுமட்டுங் கூறல் பொருந்துமா? விருந்தினரையுபசரியாது தென்புலத்தார் முதலிய நான்கிடத்தும் அறஞ்செய்தல் இருந்தோம்பி யில்வாழ்வதெல்லாவற்றின் பயனாகமாட்டாதா? விருந்தோம்பலை நீங்கி வறியார்க்கீதலையே மேற்கொள்ளின் அஃது இல்வாழ்க்கையின்பயனாகாதா? வேறொன்றும் செய்யாது கல்வினிலையம் ஆற்றிப் பலர்க் கறிவூட்டின் அஃது இருந்தோம்பலின் பயனாகாதா? தனது மனையாளோடு கூடிக் குலாவி இன்பந்துய்ப்பது இன்னிலையின் பயனாகாதா? நல்ல மக்களைப் பெறலும், அவர் குதலைச்சொல்லும் அறிவுநிறைந்தசொல்லும் கேட்டலும் அவர் மெய்யைத் தீண்டலும் ஆகிய இவற்றால் இன்புறுதலும் இன்னிலையின் பயன் ஆகாவா? எனவும் இன்ன பலபடவும் வினா எழுப்பலாமல்லவா?

கோவிலுக்குச்சென்று அங்குள்ள இறைவனை வணங்காது அங்குள்ள சித்திரங்களையும் வந்துள ஆடவர் மகளிரையும், குளத்துள் மீன்குதித்தலையும் நோக்கி நேரம்போக்கித் திரும்பும் அறிவிலியொருவனை அறிவுடையான் ஒருவன் கண்டு 'யாண்டுச்சென்று வருகின்றனை' யென வினவ, 'யான்

கோயிலுக்குச்சென்றேன்; அங்கே சித்திரங்கள் மிகநன்றாய் இருக்கின்றன; குளத்தில் மீன்கள் குதிப்பது கண்ணுக்கு இன்பந்தருகின்றது; வரும் ஆடவர்க்கு ஓரளவில்லை; பெண்கள் மிக அழகாய்த் திகழ்கின்றார்கள்;' என அவ்வறிவிலி பகருங்காலத்துக் கேட்ட அறிவாளன், 'ஆ! பாவி! கோயிலுக்குச்சென்று என்னபயனையடைந்தாய்? இறைவனை வணங்கின லல்லவா கோயிலுக்குப்போயதன்பயனை யடைந்தவனாவாய்' எனக் கூறினாற் சித்திரத்தைப்பார்த்ததனாலாய இன்பம் கோயிலுக்குச்சென்றதன் பயனாகாதா? மீன்குதித்தலைப் பார்த்ததாலுண்டாய இன்பம் கோயிலுக்குச்சென்றதன் பயனாகாதா? வந்த ஆடவரையும் மகளிரையும் பார்த்ததால் உண்டாய இன்பம் கோயிலுக்குச்சென்றதன் பயனாகாதா? என வினவின் மதியுடையோர் சரி என்று ஒப்புக்கொள்ளுவரா?

'பொறிவாயி லைந்தவித்தான் பொய்தீர் ஒழுக்கநெறி'நிற்றலும் இறைவனைத் தொழுதலாம் எனப் பின் கூறியிருக்க, "நல்லொழுக்கம் கல்வியின் பயனன்றாமா?" என வினாவெழுப்ப இடமில்லையல்லவா?

"'யான்' 'எனது' என்னுஞ் செருக்கினை ஒழித்து மன்னுயிரெல்லாந் தன்னுயிரெனப் பேணிநிற்பனேல் அவன் கற்றதனால் யாதொரு பயனையும் அடைந்திலன் எனக் கூறலாமா?" என்னுந் தொடரும் ஆராய்ச்சியிற் காணப்படுகிறது.

'யான்' 'எனது' என்னுஞ்செறுக்கறுத்தல் யார்க்கியலும்? தெய்வ மென்பதொன் றுண்டென நினையும் சிந்தையுடையாரையன்றி, 'யான்' 'எனது' என்னுஞ் செருக் கறுக்கமுபல்வா ரெவரே?

"கல்வியும் அறிவும் ஒழுக்கமும் நிறைந்துள்ள சிலர், கடவுள் இல்லை யெனவும், வேறுசிலர் கடவுள் உண்டோ இல்லையோ, அவ் வுண்மை இன்மைகளைப்பற்றி ஆராய்தலால் நாம் அடையும் பயன் ஒன்றும் இல்லை யெனவும் கூறுகின்றதுபற்றி அவரெல்லாம் கற்றதனால் யாதொருபயனையும் அடைந்திலர் எனக் கூறலாமா?" என்னுந் தொடரும் அவ் வாராய்ச்சியிற் காணப்படுகின்றது.

கடவுள் இல்லை யென்பாரும் உண்டோ இல்லையோ வென ஆய்தலாற் பயனில்லை யென்பாரும் மெய்ப்பொருளாகக் கருதுவ தெதனை? 'உண்டதே காட்சி கொண்டதே கோலம்' என்பார்க்குப்—

"பொருளல் லவற்றைப் பொருளென் றுணரு
மருளானு மாணாப் பிறப்பு"

"நில்லா தவற்றை நிலையின வென்றுணரும்
புல்லறி வாண்மை கடை"

எனக் கூறுவதுதான் பொருந்துமா?

உலகப்பொருள்களைச் சார்பெனக் கொண்டவர் 'சார் புணர்ந்து சார்புகெடவொழுகின்' என்பதைத்தான் ஒப்புக்கொள்ளுவரா?

மெய்ப்பொருள் உலகப்பொருளின் வேறெனக்கொண்டு அவையெல்லாம் பொய்ப்பொருளெனக் கொண்ட வள்ளுவனார், அப்பொய்ப்பொருட் பேற்றையெல்லாம் அருமந்த கல்விப்பயன் எனக் கருதுவரா?

சிறவாத பொய்ப்பொருட்பேற்றை ஒரு பேறெனக்கொள்வார் "நில்லாதவற்றை நிலையினவென்றுணரும்" புல்லறிவாளர்தாமா? இல்லையா?

"கண்ணப்பரைக் கல்வியில்லாதவர்" என அவ்வாராய்ச்சி பகர்கின்றது. இராமகிருட்டிணப்பெரியாரையும் அங்ஙனமே பகர்கின்றது.

திருத்தொண்டத்தொகை பாடிய நம் சுந்தரமூர்த்திசுவாமிகள் கண்ணப்பரைச் சொல்லுங்காலத்துக் "கலைமலிந்த சீர்நம்பி கண்ணப்பர்" எனக் கூறியுள்ளார். இச்சமயாசாரியர்கூற்றுப் பொருத்தமுடையதா? அன்றா?

கண்ணப்பர் இச்சென்மத்திற் கற்கவில்லையென்பது ஆராய்ச்சியாளர்க்கும் ஒப்பமுடிந்ததொன்று. அதனால், சமயாசாரியாகிய சுந்தரர் 'கலைமலிந்த....கண்ணப்பர்' என்றது அவரது முற்சென்மத்தின் கலைமலிவைக்கருதிக் கூறியதாகக் கொள்ளல் தகும். வள்ளுவர், "ஒருமைக்கட் டான்கற்ற கல்வி யொருவற்-கெழுமையு மேமாப் புடைத்து" என்று கூறியுள்ளார். இதனால் முற்சென்மத்துக் கலைப்பயிற்சி இச்சென்மத்தும் வருமென்று தெரிதலால் இச்சென்மத்திற் கல்லாதாரையும் கலைபாளரெனக் கூறலாமென்பது பெறப்படுகின்றது. முற்சென்மத்துக் கலைப்பயிற்சியுண்மை அவரது செயலாலும் அறிவாலும் அறியப்படும். ஆதலால் முற்சென்மத்துக்கலையுண்மையாற் கடவுளை வழிபட்ட கண்ணப்பரையும் இராமகிருட்டிணப்பெரியாரையும் கலையில்லாதவரென எங்ஙனங் கூறலாம்?

'கல்வியுடையார்க்கன்றி மற்றையோர்க்குக் கடவுளையடைய முடியாது' என்பது ஒருதலையாமென்பதைக் "கற்றவர் விழுங்குங் கற்பகக் கனியைக் கரையிலாக் கருணைமா கடலை—மற்றவ ரறியா மாணிக்க மலையை மனமணி விளக்கை" எனவருந் திருவிசைப்பாவா லறியலாமல்லவா?

"கற்றவர் தொழு தேத்துஞ் சீர்க்கறை யூரிற் பாண்டிக் கொடுமுடி" எனச் சுந்தரமூர்த்திசுவாமிகள் கூறியதும் அதனை வலியுறுத்துமல்லவா?

" 'நற்ருள்' என்பதற்குச் சில வுரையாசிரியர் கூறியது பொருத்தமற்றது" என ஆராய்ச்சி புகலுகின்றது.

பரிமேலழகர் கூறிய வுரை பொருத்தமுற்ற வுரைதானு? சங்கச் சான்ருேரிற் சிலர் பாடிய பரிபாடற் ருெகைநூலில் ஒருபாவில்,

"மா அயோயே மா அயோயே
மறுபிறப் பறுக்கு மாசில் சேவடி
மணிதிக ழுருபின் மா அயோயே"

என வந்துள்ளமை புலவர்க்குத் தெரிந்ததொன்றே. அதனுள் மாசில் சேவடி என வந்தது குற்றமுடையதா?

"மெய்ப்பொருட்கு வேருக மறமில்லை" யென ஆராய்ச்சி புகலுகின்றது.

"பொருளல் லவற்றைப் பொருளென் றுணரும்—மருளானு மாணுப் பிறப்பு" என்கின்றவர் மருளையும், பிறப்பையும் மெய்ப்பொருட்கு வேருகக்கொண்டு கூறினுரா? வேறிலவாகக்கொண்டு கூறினுரா? வேருகக் கருதினுரில்லையென எவரோ புகல்வார்?

மெய்ப்பொருள் ஒன்றைத்தவிர வேறு ஒன்றுமில்லை யென்பது கருத்தாயின் இஃது பொதுநூலாமா றெங்ஙனம் கூடும்?

" 'யான்' 'எனது' என்னுஞ் செருக்கறுந்தான் கடவுளுக்குவேருக எங்ஙனம் இருந்து கடவுளை வாழ்த்தமுடியும்" என ஆராய்ச்சி புகலுகின்றது.

அப்பர் சுந்தரர் மாணிக்கவாசகர் ஆகிய இப்பெரியார்கள் 'யான்' 'எனது' என்னுஞ் செருக்கறுத்தவர்தாமா? இல்லையா? இராம கிருட்டிணப் பெரியார் அச் செருக்கறுத்தவரில்லையா? இப்பெரியாரெல்லாம்

கடவுளைத் தொழுதனர் என்பது புறச்சான்றானும் அகச்சான்றானும் அறியலாமல்லவா?

கடவுள்வாழ்த்து என்னும் அதிகாரத்தில் தொழுதல் என்னுஞ் சொல் வரவேண்டுமென்பது நியாயம். மெய்யுணர்தல் அதிகாரத்தில் தொழுதல் என்னுஞ் சொல் வரவேண்டும் என்பது நியமமா?

"'மலர்' என்பதற்கு 'மனமாகிய மலர்' என்று பரிமேலழகர் உரைத்துளார். 'மலர்' என்பதற்கு 'மனமாகியமலர்' என்றுரைக்க நம் வள்ளுவர்க்கு முந்திய இலக்கியம் யாதுளது? யான் கற்றவரையிலுங் கேட்டவரையிலும் யாதொன்றும் இலது. அவ்வாறிருக்கவும் மன மலரை மலரென்று வள்ளுவனார் கூறினாரென்றல் அவர் 'குன்றக்கூறல்' என்னுங் குற்றத்தை இப்பாவிபற்றலிற் புரிந்தனர் என்று கூறலோடொக்குமன்றோ" என அவ் வாராய்ச்சியில் ஒருதொடர் தோன்றுகின்றது.

இதனால், பிந்தியநூல்களில் 'மலர்' என்பது மனமலரை உணர்த்தி நிற்கின்றதென்பதும் வள்ளுவனார்க்குமுந்தியநூல்கள் இவை யென வரையறுக்கப்பட்டன என்பதும் தெரிகின்றன.

பிந்தியநூல்களில் 'மனமலரை' 'மலர்' எனக் கூறியிருப்பின் அவர் முந்தியநூல்களிற் கண்டு தானே கூறியிருப்பர்? அப் பிந்தியநூல்களும் புலவர் குற்றமற்றவை யெனக் கொண்டவைதானே?

வள்ளுவர்க்குமுந்தியநூல்கள் யாவை? அம் முந்தியநூல்கள் எல்லாம் இப்பொழுதுள்ளனவா?

'முந்திய உரையாளர் யாவரும் பதங்கட் குரையெழுதுங்கால் இலக்கியங்காணாது பொருள் உரைக்கமாட்டார்' என ஆராய்ச்சியாளர் கூறுகின்றனரல்லவா? 'குன்றக்கூறல்' என்னாது 'சுருங்கச்சொல்லல்' எனக் கூறலாமல்லவா? இவ்வழகுடையதென்றால் வருங் குற்றமென்னை?

மனத்தை மலரென உருவகித்துக்கூறுதல் பயின்ற வழக்காகும் என்பது ஒருதலை. உயிர்போல்வதை உயிர் என்பதுபோல மலர்போல்வதை மலர் எனக் கூறினால் வரும் இழுக்கென்னை?

"இன்சொலா லீர மளைஇப் படிறிலவாஞ்
செம்பொருள் கண்டார்வாய்ச் சொல்"

என்னுங் குறட்பாவுள்வந்துள்ள 'செம்பொருள்' என்னுஞ் சொற்கு அறம் எனப் பொருள் எழுதி "மெய்யுணர்ந்தார்நெஞ்சிற்கெல்லாம் செம்மையுடைத்தாய்த் தோன்றுதலின் செம்பொருளெனப்பட்டது." என விளக்கமுமுரைத்துள்ளார் பரிமேலழகர். இங்குத் தவிர அறத்தைச் செம்பொருளென வழங்க வேறெங்காவது வள்ளுவனார்க்கு முந்திய நூல்கள் என்று சொல்லப்படும் நூல்களிற் கண்டதுண்டா? முந்து நூல்களிற் காணாதபோதிலும் போசிரியர் கூறியிருந்தால் அதை மறுக்காது கொள்ளல் மாபல்லவா?

'மலர்மிசை' மலரின் மேலிடம் எனப் பொருள்கொண்டு உள்ளும் நாற்புறமும் இறைவன் இல்லையா? என வினவிக் குற்றங்கூறின் "தேர்த் திசையிருந்தான்" என்புழித் தேரின்கண் இருந்தான் எனப் பொருள் கொள்ளாது தேரிருக்குந் திசையிலிருந்தான் என்றாவது, தேரினது நாற்றிசையினும் இருந்தான் என்றாவது பொருள்கூறித் தேரின் பீடத்தில் இருந்தான் எனக் கருதிக் கூறுவானை வினவிக் குற்றங்கூறலாமல்லவா? 'தேர்த்திசை' யென்பதிற்குத் தேரின்கண் என்றுமட்டுமா பொருளுரைக்கலாம்? இனித் தேரின்கணிருந்தான்' எனக் கூறினும் பல அவயவம் (உறுப்பு)கூடியதனால் உண்டாகிய தேர்முழுவதுமா இருந்தான் என்றும் வினவலாமல்லவா? மனத்தை மலராகவுருவகிக்கும் போது இறைவனை எங்ஙனங் கருதிக் கூறியிருப்பார்? 'அகமலர்மேல் மன்னும்' என்புழியும் இக்கேள்வி நிகழலாமல்லவா?

'மேல், திசை, தலை, இடை, கடை முதலிய இடவிசேடங்களையுணர்த்துஞ் சொற்களை உருபாகக்கொள்ளும்போது 'மேல்' என்னும் உருபிற்கு ஒப்பான மிசையென்பதை ஏன் உருபாகக்கொள்ளலாகாது? இடப்பொருளுருபுகளனைத்தையும் விடாது இலக்கணத்திற் கூறிவிட்டால் 'பிற' வென்னுஞ்சொல் ஆண்டுவரச் சூத்திரம் செய்யமாட்டாரல்லவா?

"கடவுள் எங்குமுளன் என்னுங் கோட்பாடு எல்லார்க்கும் ஒப்ப முடிந்ததொன்றாகலின் அவன் ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்கு ஏகினான் என்றல் பிழைபாடன்றோ?" என்பதும் அவ்வாராய்ச்சியிலுள்ளதே.

இங்ஙனம் ஆத்திகராய்ச் சாத்திரமறியாதை தெரிந்தவர் வினவுவாரா? "அருவ னாயினு மன்பர்க் குருவனாய், வருவ னென்பது மாமறை

சொல்லுமே" எனவும் "அகளமாய் யாரு மறிவறி யாப்பொருள், சகளமாய் வந்ததென் றுந்தீபற" எனவுங் கூறுங் கொள்கை யுடன்பாடா? இல்லையா?

'பூமிசைநடந்தோன்' எனக் கூறும் அருகரையும் இக்கேள்விகேட்டுக் குற்றங்கூறலாமே?

வியாபகமான இறைவன் சம்பந்தப் பெருமானுக்குத் தோடுடைய செவியனுப் விடையேறிக் காட்சிதந்த துண்மையா? அன்று? 'விடை யேறி' என்றால் எங்கிருந்து விடையில் ஏறினன் எனக் கேட்கலா மல்லவா? பரவையார்பாற் சுந்தரர்க்காக இறைவன் தூதுசென்றான்; மணிவாசகருக்காக மண்சுமந்தான் என்றால் எங்கிருந்து தூது சென்றான்; எங்கிருந்துவந்து மண்சுமந்தான் என வினவித் தேவார திருவாசகங்களையுங் குற்றமுடையனவாகக் கூறிப் பெரும்புகழ் பெறலா மல்லவா? அந்நூல்களே அங்குவந்தாண்டான், அங்கேதிருக்கோலங் காட்டினன், இங்கு இன்னது தந்தான் என் றிவ்வாறு பலபடக்கூறுதலி னாற் குற்றங்கூறுதற்கு மிக எளியனவாய்முடியுமல்லவா?

கண்ணப்பரை 'நில்லுகண்ணப்ப நில்லுகண்ணப்ப என் - அன் புடைத்தோன்றால் நில்லுகண்ணப்ப' என்று கூறியவர் யாவர்? அவர் எங்கிருந்துவந்து இங்ஙனஞ் சொல்லினர்? வியாபகப்பொருள் பேசு மா? பேசுமென்றால் உடலோடு கூடியா? கூடாமலா? கூடாது பேசு மென்றல் இயற்கைக்கு விரோதமல்லவா?

" 'வாழ்வார்' என்னுஞ் சொல் ஈண்டுப் பொருத்தமில்லாதிருத் தலை முன்னர்க் காட்டியுள்ளேன். வாழ்வார் என்னும் சொல்லின் 'வாழ்' என்னும் முதலசையை மூன்றின சீரின் ஈற்றசையாகச் சேர்க்கால் வெண்பாத்தளை தட்டும்படியாக வெண்பாவியற்றல் போலிப்புலவ ரது செய்கையாம். இரண்டுசீரிற் சேர்க்கப்படவேண்டிய ஒருசொல் திருக்குறளில் எந்தப்பாவிலேனும் வரக்காணின் அவ்வரவுக்குத் தக்க தோர் காரண மிருக்குமென்று எண்ணி ஆராய்ந்து அதனைக் கண்டு கொள்க" என்பதும் அவ்வாராய்ச்சியி லுள்ளதே.

இங்குந் தக்கதோர் காரணம் இருக்குமென்று எண்ணி ஆராய்ந்து அதனைக் கண்டுகொள்ளக்கூடாதா? அங்ஙனம் வந்துள்ள குறட்பா இரண்டொன்றை எடுத்துக்காட்டி இன்னகாரணத்தால் இங்ஙனம் வந் துள்ளன வெனத் தனித்தனி விளக்கியிருந்தால் நன்றாயிருக்குமல்லவா?

"தட்டுநிற்றலிற் றளையே" எனக் கூறியிருத்தலால் தளைதட்டுநிற்கும்படிபாடல் போலிப்புலவரது செய்கையென யாப்பிலக்கணம் படித்தவர் சொல்லுவரா? தளைதட்டுநிற்கும்படி பாடல் நற்புலவர் செய்கையல்லவா? (தளை கெட்டுநிற்கத்தான் பாடக்கூடாது.) வகையுளியைக் கூறியுள்ள இலக்கண நூலாரும் போலிப்புலவர் குழுவினுள் ஒருவர்தாமா? தக்க காரணமிருந்தால் வகையுளிவரலாமென்றும் தக்க காரணமில்லாதிருந்தால் வகையுளி வரலாகாதென்றும் எந்த நூல் உணர்த்துகின்றது?

'சுடச்சுட நோற்கிற் பவற்கு'
'அஃதிலார் மேற்கொள் வது'
'ஆற்றல் தலைப்பட் டவர்க்கு'
'சிலர்பலர் நோலா தவர்'
'செம்மல் சிதைக்கலா தார்'
'பெரியார்ப் பிழைத்தொழுகு வார்'
'எண்ணப் படவேண்டா தார்'
'இழுக்கார் குடிப்பிறந் தார்'
'குலம்பற்றி வாழ்துமென் பார்'
'சுற்றமாச் சூழ்ந்து விடும்'
'ஆழி யெனப்படு வார்'

எனவருங் குறட்பாக்களின் இறுதிச்சீர்கள் வகையுளிக்கு இலக்காய் வந்துள்ளன. இங்ஙனம் வரப் பாடல் போலிப்புலவரது செய்கையெனப் பிறர் மறுக்காதிருக்குமாறு ஆராய்ச்சியாளர் தக்க காரணங்காட்டமுடியுமா? (தக்க காரணங் காட்டினால் நலமாகும்.)

'நிலமிசை' என்பதற்கு நிலத்தின்மேல் எனக் கூறாது மிசைநிலம் எனப் பிரித்துக்கூட்டி மேல் நிலமாகிய வீடு எனக்கூறலாகாதா? 'நுனிக்கொம்பர்' என்னுந் தொடர்மொழிக்குக் கிடந்தபடியே பொருள் காண்கின்றனரா? பிரித்துக்கூட்டிப் பொருள் காண்கின்றனரா?

'வாழ்தல்' என்னுஞ் சொற்கு நேர்பொருளென்னை? (ஆய்ந்து கூற வேண்டும்.) உடலோடுகூடித் தங்குதலைச் சிலவிடத்து அஃது உணர்த்திநின்றால் எங்கும் அங்ஙனமே நிற்குமென்றல் பொருந்துமா?

'இல்வாழ்க்கை' 'வாழ்க்கைப்பட்டேன்' என்பனவற்றிற்குப் பொருளென்னை?

'மறைவாழி' 'நாண்வாழியர்' எனப் பலவிடங்களில் வந்துள்ளன. மறைக்குடல் எது? உயிர் எது? நாணிற்குடல் எது? உயிர் எது?

'புகன்று' 'அமர்ந்து' என வருஞ் சொற்களுக்குப் பொருள், முறையே சொல்லி, தங்கி யென்பவை தாமே சங்கநூல்களில் விரும்பியென்னும்பொருளை யுணர்த்திப் பலவிடங்களில் அவை நிற்கின்றன? அவற்றிற்கு அது நேர்பொருளாமா? 'சேர்' என்பதும் அவைபோன்ற சொல்லெனக்கொண்டால் வருங் குற்றமென்னை?

நூல்களில் வருஞ் சொல்லெல்லாம் வெளிப்படைச்சொல்லாகவேயிருக்கவேண்டும் என்பது நியமமா? குறிப்புச்சொற்கள் வாராமற் போனாற் சுவைபயக்குமா?

'சித்தத்தைச் சிவன்பாலே' வைத்தவன் இறைவனை அடைந்தவனுவனு? சித்தத்தை அவவழியில் விட்டுக் கையாற் கும்பிடுதல் நாவால் வாழ்த்துதல் செய்பவன் இறைவனை யடைந்தவனுவனு?

இக்கடவுள்வாழ்த்துப்பாக்களை வள்ளுவனார் இயற்றவில்லை; யாரோ உரைகோளாளன் ஒருவன் இயற்றியுள்ளான் என்று கூறி 'நீடு' என்பதற்குப் பதிலாக நாளும் என்னும் ஒரு சொல்லிட்டுப் பாடமுடியவில்லையெனக் குற்றங்கூற முற்படின் பெரும்புலவரெல்லாரும் இவை வள்ளுவனாரியற்றியனவே எனக் கொள்ளுமாறு பாடிய அவனுக்கு நாளும் என்னு மொருசொல் நீடு என்பதற்குப்பதிலாகச் சேர்த்துப் பாடவா முடியவில்லை? என வினவுவோர்க்கு என் கூறுவது? வள்ளுவனார்பாடல் என மருளச்செய்தவன் மகாசமர்த்தனல்லவா? அவனுக்கு நாளும் என்னும் சொல்லிட்டுப் பாடமுடியவில்லையென்றல்தான் பொருந்துமா?

'நீடு' என்பது நரம் கண்டவரையில் நெடுங்காலத்தை யுணர்த்தி நிற்குமானுல் அதற்கு 'நாளும்' என்னும் பொருள் இல்லையெனக் கூறலாமா?

நம்மால் அறியமுடியாதசொல் வந்திருந்தால் அஃது வள்ளுவனார் கூறியதன்று எனக்கொள்ளல் தகுமா?

இவ்வினுக்களுக்கெல்லாம் ஆராய்ச்சியாளரே காய்தல் உவத்தலின்றி நடுநின்று விடையெழுதுவார்களெனவும், விடைகள் புலவர்பலரும் ஒப்பத்தகுந்தனவாய் இருக்குமெனவும் நம்புகிறேன்.

இங்ஙனம்,

பண்டித. சித. நாராயணசாமி,

மேலமடம், குன்றக்குடி.

---

ஸ்ரீ:

# திருச்செந்தூர்ப்பரணி.

மதுரைத்தமிழ்ச்சங்கத்துப் பாண்டியன் புத்தகசாலையில் 'திருச்செந்திற்பரணி' என்னும் பெயருடன் இருதலையும் ஒடிந்துசிதைந்தும் முதலிற்சில இதழ்களும் இடையிடையே பல இதழ்களும் அழிந்தொழிந்தும் ஓரேட்டுச்சுவடியுள்ளது. இது குமாரவேள் சூரசங்காரஞ் செய்த விருத்தாந்தத்தைச் சற்றேறத்தாழ 1200 தாழிசைகளாற் கூறுவது. இதனையியற்றினோர் பெயர் முதலிய விவரமொன்றும் தெரியவில்லை. [இரணியன்வதைப்பரணி என்பதுபோல இதனைச் சூரன்வதைப்பரணி என்று குறிப்பதே பொருந்துவதாயினும் ஏட்டிற்கண்டபடியே தலைப்பெயர் குறிக்கப்பட்டது.] தக்கயாகப்பரணி முதலியன போல இதுவும் தனிப்புத்தகமாக வெளியிடத்தக்கதாயிருத்தலால் மேலும் சிதைந்தழியாது பாதுகாக்கக்கருதி ஏட்டுப்பிரதியிலிருந்தபடியே இது இங்கு வெளியிடப்படுகிறது. இந்நூற் பிரதிகளுடையார் கொடுத்துதவுவார்களாயின் தனிப்புத்தகமாக வெளியிடலாகும்.

உதவிப்பத்திராதிபர்.

---

### கடைதிறப்பு.

கலைமாதவர்நிலைபோயுரைகலைசோதனைசெயவே<br>
மலைபோல்வளர்முலையா .... .... (உஅ)

பிடியோநடைகொடியோவிடைபிணையோவிழியிணைதா<br>
ளடியோமலரெனவேமயலருள்வீர்கடைதிறமின். (உகூ)

.... .... ....

வானேயிடைதானேயெனுமடவீர்கடைதிறமின். (௩0)

குப்புற்றலர்செந்தாமரைகுளிர்சைவலம் ....<br>
.... .... .... (௩க)

இடமொத்தவர்மருமத்தலமிருபொற்சிமிழ்புதைய<br>
வுபரித்தொழின்முடிவிற்றுயிலுறுவீர்கடைதிறமின். (௩உ)

.... .... ....

ஒவொருமைக்கணணைத்தேதுயிலுறுவீர்கடைதிறமின். (௩௩)

வேறு.

கனவின்கணணைத்தார்தமை .... ....
.... .... கைபேசித்
தினமிங்ஙனமறையுந்தொழிலுடையாரெனநாடித்
தெளியாமயலுடையீருயர்செம்பொற்கடைதிறமின். (௩௪)

.... .... மெள்ளப்புரிகுறியைக்
கவிவாரணமுதலானவைகைகாவியற்ற
உள்ளக்களியொடுசென்றிடையூறுற்றதுகண்டே
.... .... திறமின். (௩௫)

கல்லா .... .... கதுவிக்கலைகற்றோர்
கவியாமெனவொழுகாவரிகருதும்படிமுடிவுற்
றெல்லா .... ....
றெழில்பெற் .... .... கடைதிறமின். (௩௬)

முலைகண்டவர்முலையேதிருமுடிகண்டவர்முடியே
முன .... .... ன்னே
கலைகண்டவர்கலையே .... டவர்காலே
காணும்படிவருவீரிடுகெதவங்கடைதிறமின். (௩௭)

ஒரு .... ....
லாலொருமு .... ாசையுணர்த்திப்
பொருகார்முகமதவேளிடுபூசற்கலகத்தே
பு .... .... திறமின். (௩௮)

புருவஞ்சிலை .... யுங்கரமெறிவேல்
புணர்கொங்கைகளிணைகொண்டெதிர் ....
.... .... .... யுலகெங்கணுமெனவே
யொருவாவிறலுதவுந்திறமுடையீர்கடைதிறமின். (௩௯)

[வேறு.]

மலைக்கணிருந்தகருமுகில்போல் .... ....
.... .... ....
.... .... .... ணுக்குலமுடையீர்
முதுபொற்கபாடந்திறமினோ. (௪0)

எந்தைபெருமான்றிருச்செந்திலிறைவன்றனைப்பெ .... ....
.... .... கபாடந்திறமினோ. (சக)

கங்குன்முழுதுங்கணவருடன்கலவிசெயினும்வைகறையிற்
சங்கமுழங்க .... .... (சஉ)

.... பிரிந்தகாதலர்தம்வரவுதாழவளர்த்தபசுங்
குருவிக்கலவிகண்டுமனங்குழைவீர்கபாடந்திறமினோ. (சங)

.... .... ....
.... ள்ளத்துறக்கத்தரசுதவுங்கந்தன்கவிக்குத்திறமினோ. (சச)

பெருகன்புகழைவருஞ்சாற்றுப்பெருக்காமென்ன ....
.... .... .... திறமினோ. (சரு)

கடைதிறப்பு முடிந்தது.

ஆகத்தாழிசை எo.

---

## கோயிற்சிறப்பு.

மைவனத்திறற்கன்னிபேயுடன்
வதிவதுற்றுவேமதிசுரத்திடை
யிவ்வனத்தில்வாழ்கெ .... ....
.... .... .... .... (க)

முக்கணெம்பிரான்முனிவுகொண்டநாண்
முரிவெஞ்சிலைவீரனூர்பொரத்
தக்கன் மாமகத்திற்றதேவர்தந்
தலைகள் .... .... (உ)

.... .... .... த்தநாள்
விசையையங்கவன்றசைநிணங்கள்செஞ்
சோதிரீனிற்றுய்ப்பல்செய்தவன்
றுன்பிலென்பினிற்சுவர்வளர்த்தரோ (ங)

திர .... .... ....
சிவன்மிதித்தலுநவைபடைத்ததேர்
சரியுமச்சினிற்பெரியதூணொடுத்
தாமிணக்கியப்பலகைபாவியே. (௪)

வருசலந்தரன்மூரணழிந்த .... ....
.... .... .... ரந்தர
வெருவுதானவர்க்குரமிலாதவீழ்
வேலும்வாளுமேல்விடுகையாகவே. (௫)

வெள்ளியம்பொருப்பெள்ளிராவணன்
வேரிடந்தகாளீசர் .... ....
.... .... ழ்தலுந்தளர்வுறுந்நிசா
சார்மறந்தசெஞ்சாநிரைந்தரோ. (௬)

தாருகாசுரன்சூரியாலுயிர்
சாயவேயவன்காயவெங்குடர்
நாரிலுல்வரிந்தவுணர் .... ....
.... .... செம்மயிர்க்கற்றையிட்டதே. (௭)

புரிசையும்பெருங்கோபுரங்களும்
புரியுமென்புவெண்சுதையின்மண்ணல்போற்
குருதிபுள்ளிபட்டுறைதல்சித்திர
.... .... மூர்தில்வைகுமே. (௮)

வாயில்காவலிற்பேய்கணிற்றல்போல்
வளர்கரும்பொனின்மகரதோரணஞ்
சேயுயர்ந்திருதம்பநிற்கமேற்
சென்றுலாவுதோனின்றி ... .... (௯)

அவுணர்சென்னியிற்றிடிகைமாமணி
யவர்களோடநுமரணமாதரார்
இவளுநூலிடைப்பருமமாமணி
சுற்றுமுற்றுமேசுடர்விளக்கமே. (௧௦)

[வேறு.]

பருந்தி .... .... மவற்றின்கால ....
.... குடர்நால்வனசெம்பூமாலைபோன்றிடுமால். (கக)

அணிநரம்புகயிறுகவரிதலைகண்மலராக
மணிவிளங்குவாயிறெறுமாலை .... .... (கஉ)

[வேறு.]

அற்றகாங்களைக்கட்டியங்கைசிலவலகிட்டுக்குருதிநீரா
லிற்றதசைகளைக்குழைத்து த்திருமெழுக்கிட்டநுதினமுமிருப்பவாங்கே.

சோரிநிணத் .... பழும்பேய்வாய்துலங்குங்கொள்ளிப்
பாரியதீபமுமீமம்படர்ந்ததிருவெண்ணீறும்பணியறுவே. (கச)

[வேறு.]

பேயுடன்செந்நாய்துதிக்கக்கூகைபாடப
.... .... .... ாவெருவையாட
வீயுமெறும்பும்பார்துதெரிசித்தெங்கு
மிடையறுதிருப்பனவெம்மிறைவிகோயில். (கரு)

தருவாமுந்தப்பாதுபெற்றவீரர்
தலைகண்ணு .... .... கண்டோர்
வெருவாமுந்தப்பாதுகாவலின்றி
வெவ்வாளாலரிவாதற்கொவ்வாளல்லள், (கசு)

ஓமத்தீயிடைவீரர்வாளாற்சொன்ன
வுறுப்பனை .... ளைகோள்விந்தை
நாமத்தீயெனக்கொடுத்துகைப்பாலோ
நரியினெடுகூளிகள்வாய்புலநுமாலோ. (கஎ)

விழுக்கிடந்துபீடத்தின்மெ .... ....
.... .... குப்பலிகொடுப்பச்செல்வோர்செந்நீர்
வழுக்கிடந்துவழுக்கிவிழுப்பிணமென்றோடி
வரும்பேயையோகினிகண்மறிக்குமாலோ. (கஅ)

[வேறு.]

.... .... காடியும் புலிகளும்
வனமடைந்தமிருகங்கள் பலவும் பலிதர
வெயிலிடும்படை சுமந்து சிலபாரிடகணம்
விவிதமென் பரதநாடகமிசைந்து. (௧௯)

.... .... மதில்வைத்தவுடனே
தலைவிமுன்புடலம்வீழ்குதலுமற்றதலைபோ
னிலைபதொன்றுமிடறேடெதிருறப்பெறுவா
நிருபனென்றுசில .... .... (௨0)

.... .... ந்ததலைபேய்மகள் குடங்கைதனிலே
மிகவுணங்குவனநீள்பனையுலர்ந்தமடன்மே
லழியுறுங்குவெளிலானவைக .... ....
.... .... .... வெனுந்தகையவே. (௨௧)

[வேறு.]

தலையிளங்குழவிதன்குடாணிக்துவருமே
கலையகன்றுமூலைகாணவருடாகினிகளே. (௨௨)

.... .... .... .... ....
கொள்ளிவாயலகைகோயின்முழுதுந்திரியுமால். (௨௩)

முன்னைவெவ்வினையிலூனுணமுயன்றவுயிர்க
ளென்னைகூறுவனவெண் .... .... (௨௪)

**கோயிற்சிறப்பு முடிந்தது.**

ஆகத்தாழிசை ௧௧௫.

---

## தேவிவருணனை.

கோவிலின்வளமைதன்னைக்கூறினுமதனுள்வாழுந்
தேவிதன்மகிமைதானுந்திருவு .... .... (௧)

[வேறு.]

இரவியினுக்கழிவுற்றினிதடைதற்கிடமற்
றிருள்களனைத்தும்வனத்திடைவழிதொக்கதெனக்
காளமிடற்றிறைமுக்கணரிதழை .... ....
.... .... .... னக்கரியநிறத்தினளே. (உ)

பழவுவர்மைக்கடலிற்பவழம்வடித்தகொடி
படர்வதெனக்கனலப்படிவடவைத்திரளிற்
றழல்சிகைவி .... .... ....
தழைதுருதிக்கிரணச்சடைகொள்சிரத்தினளே. (௩)

குலவரையெட்டுமுறக்கொடியபுரைப்பலுடைக்
குலவரவெட்டினுமுட்கொளவ .... ....
.... .... .... குழைக்கழகுகொடுத்தசெவிக்
கறவுமெதிர்த்தமரிட்டடர்நயனத்தினளே. (௪)

திருநுதலிற்குருதித்திலகமிருப்பதுமெய்ச்
சிறுகுழவிச்சசியிற்சி .... .... ....
திருபிறையெ .... மதிக்கிடையின்முளைத்தெனமற்
றிதழ்பிறழக்கடையற்றெழுவெளெயிற்றினளே. (௫)

ஒருமலைமத்துருவத்தொடுகடை .... ....
.... .... தததனுவுக்குடல்குழைவுற்றதினிப்
பெருமலைபெற்றனமிப்பிரியையிடத்தெனவப்
பிறைமுடிநச்சுதுணைப்பெரியதனத்தினளே. (௬)

பழுதறுவெற்பிடை .... .... ரப்
பதுமயிருற்றநெறிப்பதனைமறைத்துநிரைத்
தெழுமணியக்கமதற்கிடையிடைமுத்தமுமற்
றிதாவடத்தொடுமுற்றுதாவடத்தினளே, (எ)

பிரமரளப்பரு .... .... கணர்கற்
பிரியையெனக்கருதிப்பெரியதாக்குரியைப்
பாசியெடுத்துதவப்பரிவொடுடுத்துமணிப்
புணிகொடிசைத்தகதிர்ப்பருமநுசப்பினளே, (அ)

கல .... .... ளெடுத்தவுணக்
கடல்சுவறக்கடையிற்கனலெனவிட்டவயிற்

பலவிசையத்தைமிகப்பரவியகத் துவகைப்
பாதமியற்றிடுபொற்பதவனசத்தினளே. (கூ)

[வேறு.]

.... .... ளிவரைவேண்டுமெனமகுடமாம்
பாரவிரற்காழிகளாம்பாடகமுஞ்செயலாமால். (க0)

வெம்பருதியணங்கினுக்குவிருப்பிடின்மதாணி ....
.... .... ண்கலமுமாகுமால். (கக)

அண்டங்கள்கைப்பிடிக்கிலம்மனையாமம்மனைக்குக்
கொண்டணிமுத்தாரமாய்க்கொங்கைக்குமிடலாமால். (கஉ)

.... .... பொறிகதுவச்சுருக்கெனத்திக்கயமெட்டு
முழல்வனவாற்காலாங்கியுருத்திருமஞ்சுவரால். (கங)

தேவிவருணனை முடிந்தது.

---

## பேய்களின் வருணனை.

.... கொடியமனக்கொடியகாரவுணன்றலைமிதித்த
பெண்கொடிதன்னேவல்செயும்பேய்களையாம்பேசுவாம். (க)

[வேறு.]

அந்தகாரமுமீருண்ட .... .... ....
.... .... .... ளுத்திடச்
சந்த்ரசூரியமண்டலந்தாழ்வுறத்
தம்முடம்புகறுத்தறநீண்டன. (உ)

ஊழித்தீயுமுருத்திரனெற்றியி
லுற்றதீயுந்திரிபுரஞ்சுட்டெழ
.... .... .... ....
.... .... சியெனக்குடிபுக்கவயிற்றின. (ங)

இறைச்சிவற்றியெலும்புநரம்பெழுந்
    தியங்கியோடித்தியங்கியமெய்யின
பறைச்சியாயி .... ....
    .... .... .... (௪)

ஓந்தியின்புறப்போலுமுதுகினி
    லொழுக்கெறிந்தவழுக்கமுடையன
காந்திநின்றெரிகண்களினுளிடைக்
    கைக்கொள்கின்றதுணைக் .... (௫)

முதியகூகையடைகிடக்கின்றமா
    முடையெழுந்தபெருந்துளைமூக்கின
சதிசெயுங்கருங்காகங்குடிபுகச்
    சடைவிழுந்தமுடமயிர்க்காதின. (௬)

அர .... யுமுட்டையிட்
    டமரவேயிடமாச்செலுமுந்திய
புராணமாமதிபின்கலைதேய்வது
    போலநாளுக்குநாண்மெலிகின்றன. (௭)

பாசிபற்றியெழுந்துயர்பல்லின
    .... .... யறக்காய்ந்தன
மூசிரோமமுளைத்தெழத்தட்டியே
    முட்டியிட்டமுரணுடைத்தாளின. (௮)

காட்டுளேற்றுப்பனையினைக்காண்டொறுங்
    கௌவைகொண் .... னும்பிள்ளை
தேட்டமாய்ச்சிறுபன்மடற்பெண்ணையைச்
    சென்றெடுத்துளநின்றுதிகைப்பன. (௯)

கொல்லனூதிவிடுத்ததுருத்திபோற்
    கொடிறிரண்டு .... கருழிந்தன
வல்லவாமெனச்சொல்பவரில்லையெ
    மரும்பசிக்கெனவாங்குளமேங்குவ. (௧௦)

வாயின்முற்றமருங்குபின்முன்னெலாம்
வாய்ப்பவேமிகக் .... க்கணங்
கோயிலுற்றமர்கொற்றவையேவலிற்
குறைவறச்செய்துறைவனவாமரோ. (கக)

கந்தசாமியொடிந்திரன்போர்செயக்
கட்டழிந்தகடவுளர்நீ ....
.... .... யுதஞ்செந்தசைச்சேற்றினிற்
சாலவேபடக்கால்குறையானவும். (கஉ)

சோழன்பின்னிடக்கூடலிலெம்பிரான்
சுந்தரப்பெயரம்புதொடுத்தநா
ளாழங்கொண்ட .... ழ்கியே
யடுக்கும்வாதஙடுக்கல்பிடித்தவும். (கங)

மீனலோசனிகாவிருமாதிர
விசையஞ்செய்துழிவெங்களந்தன்னிலே
கானமானகவந்தம்பிடித்திடுங்
கட .... கைகளும்போனவும். (கச)

உக்கிரப்பெருமாறன்மகபதி
யுரமடக்கியவெங்களந்தன்னிலே
புக்கிரத்தங்குடித்துவெறியினாற்
போதவின்னும்புலம்பித்திரிபவும். (கரு)

சலந்தராசுரன்சக்கரத்தால்விழத்
தசைகடித்தசையினிலென்புதைத்
தலங்கள்போலவசைந்துபல்வீழவே
யாக்குங்கூழினுக்கேக்கறநிற்பவும். (கசு)

காளிதாருகனைக்கொலக்கண்டமாய்க்
கண்டசென்னிகளைக்கனலிற்சுட
வாளிபோற்றலையோடுதெறித்திடு
மாத்திரத்தினிற்னெத்திரம்போனவும், (கஎ)

.... .... ச்சிங்கவாளிதொடுத்தநாண்
மதுரைநாதன்முன்மால்கரிவீழ்தலுந்
தானிடிக்குரல்போலுமுழக்கினிற்
றவிடடைந்துசெவிடுபிறந்தவும். (கஅ)

.... .... .... ாவாம்பரிக்
கொருவனைக்கொலவோடியவன்றசை
கலகநாய்கொண்டதொங்கலைப்பற்றியே
கடித்துவீழ்த்திடக்கண்டநெரிந்தவும். (கசு)

ஐயனே .... .... ணி
லழிபுலாலுண்கழுகுதன்மிச்சிலாஞ்
செய்யசோரிக்குநீட்டியநாவையுந்
தீமையாற்கொளலூமைகளானவும். (உ0)

எண்ணிறந்தனகூளிகள் ....
.... கொள்வதுபாரிடங்காண்பவர்
கண்ணிறந்தனவெம்பசிக்கென்செய்வோங்
கருணையென்றுவருமெனச்சுற்றவே. (உக)

பேய்வருணனை முடிந்தது.

ஆகத்தாழிசை கசக.

இந்திரசாலவித்தை.

அவுணர்தலையடுக்கியதோரடுக்கலின்மேலடுகளிற்றின்றலைப்பீடத்தி
லுவணமுதலியபறவையோவாதபந்தரிடுநிழலிலாங்கே, (க)

குதிரை .... ....டுகொல்யானைச்செவியாலவட்டந்தாங்கி
யதிணுரியாற்பாவாடையடுத்தெடுத்துச்சிலபேய்களசைப்பமாதோ. (உ)

ஆகவத்தினிடைக்கிடந்தகெ .... கவிப்பவம்மைமுன்னே
மாகவர்தநின்றுடநரிபாடவீற்றிருந்தவைகறன்னில். (ங)

பழுவெலும்புதொடாறுத்தமுதுகெலும்புதண்டாகப்பரித்துக் ....
.... .... மாகமூப்படைந்தகட்டியப்பேய்முன்கைகூப்பி (ச)

[வேறு.]

தலையரிந்து கடன்கொடுத்தவுடனின்றாடத்
தள்ளியேகுருதியுண்டதாகப்பேயைச்
சி .... .... கண்டபேயிற்
சிலபேய்களபாரதந்தீர் துமென்றே. (ரு)

கங்கைமுதற்போராறுமேருவாதி
கதிர்வரையுங்காசிமுதற்பதியுநாடிச்
செங்கைதொழு .... பேயுன்னைத்
தெண்டனிடவந்தது நின்சித்தமென்ன. (சு)

பாரவவாவிடுகவெனவாயில்காவற்
பாரிடங்கள்விடுக்கவந்து பாரின்வீழ்ந்து
சரணமென .... த்தாற்
றாழ்தலுநாமுவந்தனனீயெழுகவென்ன. (எ)

எழுந்துகாங்கட்டிவாய்புதைத்து நிற்ப
வித்தனைநாளெங்கிருந்தாயென்னவன்னே
யழுந்துசில .... செய்தபாவ
மதுகண்டாதுறையகலவகன்றோமன்றே. (அ)

தீவேழுங்கடலேழுமலைகளேழுஞ்
சேருலகமேலேழுமற்றையேழும்
பாவேழும்விஞ்சைகளுங் .... ம்
பாவாயுன்னருளிருந்தபான்மையன்றே. (கூ)

இந்திரசாலத்தொழிலிற்பலவுங்கற்றே
மிவற்றிலொருசிறிதுமிறைப்பொழுதுகண்டார்
தந்திரமாமற் .... .... குங்காணத்
தருவதெனவம்மைமுகமலர்தலோடும். (க0)

கைகுவித்துத்திரைவளைத்துமறைவினின்று
காரிகைபாரக்கென்றுவெளியேவந்து
மைகுவித்தகண்ணு .... .... ற்பாநு
மண்டலம்பார்போனவழிவருவாரைப்பார். (கக)

[வேறு.]

வருநிசாசரர்கடலைகைகாலற
மயூரவாகனன்மலைந்திடக்
குருதிநீர்களெழுகடலுமோடியலை
கு .... ரிகுணங்கள்பார். (௧௨)

சிரமிழந்தனவுரம்பிளந்தன
திரண்டகால்களுமழிந்தவெ
கரமகன்றனநிலத்தின்மேல்விழு
களேபரத்தொகைகணக்கில்பார். (௧௩)

.... .... .... ச்சிமேதையது
தொடரெலும்பினுடன்மச்சையாய்
மேலிலிக்கருவிகொய்திடாவகைவெ
வேறுதொக்கனவிதங்கள்பார். (௧௪)

சோரிவெள்ளநிண .... ....
து வண்டிடுங்கொடிகள்குடர்களே
காரியானையசிசெவிகளேயிலைகள்
கடகமேயிலகுகயல்கள்பார். (௧௫)

பாரெனச்சொலுமுன்மசாதத்தையுறு
பாணி .... மானெனப்
பேரிரைப்புடையவாய்நகைப்புடைய
பேய்கள்பற்பலநடக்குமே. (௧௬)

[வேறு.]

உண்ணுதிரப்புனனண்ணியதென்றுகை
யொன்றிடமொண்டிடுமே
தண்ணென .... ம்வாய்நிறையாது
சலித்துவிரூஞ்சிலவே. (௧௭)

கைந்நிறையாமலெடுப்பனசெந்தசை
கண்டுபறிப்பசில
பொய்ந்நிறைவாகியதானவராகவ
பூமிசுழன்றனவே. (௧௮)

.... .... விழுங்கு துமென்று
கொடிற்றையலைப்பனவே
யெழுப்பியபற்கள்கொடீரலைமெல்லுது
மென்றுகறிப்பனவே. (௧௯)

தந்தம்வயிற்றினையொப்பவிழுந்த ....
.... வறிதாயினவே
யெந்தம்வினைப்பயனுண்ணவுணப்பசி
யேறுமெனச்சொலுமே. (உ0)

இவ்வகையிந்திரசாலமியற்றிய
தென்னவறிந்துகண
மவ்வைதவிர்த் .... கவெனக்கை
யமைத்தவள்கூவுதலும். (உ௧)

[வேறு.]

வந்துவணங்கியபேயையணங்குநோக்கி
மகிழ்ந்தனமுன்விஞ்சையினியமைகமுன்னந்
தந்தவரங்களை .... .... டுமேனுந்
தருதுமினிச்சொல்கவெனச்சாற்றக்கேட்டே. (உஉ)

வேண்டுவதுன்னடிக்கன்புபிரியாதாக
வெறுங்கல்லாய்க்கிடந்தபேய்முன்போலுய்ய
வீண்டுதவ .... யினிப்பேயெல்லா
மெமக்கபாரதஞ்செய்யாதிருக்கவென்று. (உ௩)

திருவாக்குக்கொடுத்தலுமேயம்மையெம்மைச்
செய்தொழிற்குவிதித்தமைநன்றென்ன ....
.... .... குயிருந்துகற்றதெங்கே
யுண்மையாம்விஞ்சையெனவுரைக்கக்கேட்டே. (உ௪)

பூவலம்வந்தேன்கிரியுங்கண்டுநல்ல
புண்ணியரோடிமகமேருச்சார ....
.... .... .... ....
.... .... ....

* * * * *
* * * * *

[தொடரும்.]

ஸ்ரீ :

# திருக்குறள் மூலமும் தெளிபொருள்வசனமும்.

இது, தெய்வப்புலவர் திருக்குறளுக்கு வித்வான் ஸ்ரீ மு. ரா. அருணாசலக்கவிராயரவர்களியற்றிய புதியதோர் உரைநூலாகும். இதுகாறும் வெளிவந்த குறட்பதிப்புக்கள் பிறவனைத்தினும் இது மிக்க சிறப்புடையது.

பரிமேலழகருரை ஒப்புயர்வற்றதாயினும் கற்றவர்க்கேயன்றி மற்றவர்கட்கு அத்துணை எளிதாகப் பயன்படும் இயல்பினதன்று. ஆகலான் அக்குறை நீக்கவேண்டி அவ்வுரையையே அடியொற்றி எழுந்த இது பலர்க்குமொக்கப் பயன்தருமென்றல் சொல்லாமையே அமையும்.

தன்பெயருக்கேற்பத் திருக்குறணூலின் நிட்பநுட்பங்களைத் தெளிவாக வுணர்த்தும் இது அரியதொரு பொழிப்புரைவடிவில் அமைந்து விளங்குகின்றது. பிறநூல் மேற்கோள்களும், சொற்பொருளாராய்ச்சிகளும், இன்றியமையாத ஏது நிரூபணங்களும், சமயத்திற்கேற்ற சரித்திரப் பகுதிகளும் இதன்கண் மலிந்து உரைநடைக்குப் பேரழகு செய்கின்றன. தமிழணங்கு தன் சிறந்த அணிகளுள் இதனையும் ஒன்றாக ஏற்றருள்தல் ஒருதலை.

கற்றுவல்ல பெரும்புலவர்க்கன்றிக் கல்விமுதிராத இளஞ்சிறுவர்க்கும் உறுதுணையாக இஃது உடனிருந்து உதவற்பாலது. பிரசங்க மேடைகளிற் கேட்டார்ப்பிணிக்கும் சொற்பொழிவாற்றுதற்கு ஏற்ற பொருளுரைகள் இந்நூலகத்துப்போல வேறு எந்நூலகத்தும் காண்டலரிது. அங்ஙனமே வியாசமெழுதல்போன்ற வேலைகளிற் பள்ளிச் சிறுர்கள் பயிற்சிபெறுதற்கும் இதுபோற் சிறந்த கருவி வேறெதுவுமில்லை.

இவ்வசனநூல், மதுரைத் தமிழ்ச்சங்கக் காரியதரிசியும், உயர்தர நீதிமன்றவாதியும், சென்னை சட்டசபை அங்கத்தினருமான ஸ்ரீமாந் டி. ஸி, ஸ்ரீநிவாஸஐயங்காரவர்கட்கு உரிமையாக்கப்பெற்ற பெருமையுடையது; மஹாமஹோபாத்தியாய ஸ்ரீ உ. வே. சாமிநாதையரவர்கள்,

மஹாவித்வான் ஸ்ரீ உ. வே. ரா. இராகவையங்காரவர்கள், பண்டிதமணி. திரு. மு. கதிரேசன்செட்டியாரவர்கள், ராவ்சாகிப் ஸ்ரீமான். வெ. ப. சுப்பிரமணியமுதலியாரவர்கள், ஸ்ரீமான். S சோமசுந்தரபாரதியாரவர்கள் முதலிய தமிழறிஞர்களின் அரிய பெரிய மதிப்புரையுடன் கூடியது; நல்ல காகிதத்தில் நானூற்றைம்பது பக்கங்களளவில் அழகாக அச்சிடப் பட்டது. விலை ரூ. 2-8-0. வேண்டுவோர் மகா-ா-ா-ஸ்ரீ மு. ரா. அருணசலக்கவிராயரவர்கள், தமிழ்வித்வான், ஸந்நிதிக்குக் கீழவீதி, திருப்பரங்குன்றம், என்ற விலாசத்துக்கு எழுதிப் பெறலாம்.

பத்திராதிபர்.

---

## மதிப்புரை.

இராமாமிர்தம் அல்லது பயனற்ற படிப்பு:—இது 'லக்ஷ்மி,' 'வ்யர்பாரி' என்ற பத்திரிகைகளின் ஆசிரியரான K S. சுந்தரம் என்பவரால் நாடகரூபமாக எழுதப்பட்டது. எவரும் உத்யோகமே குறியாகப் படிப்பதனால்வரும் தீமையும், கைத்தொழிலால் விளையும் நன்மையும் இதில் நன்கு விளக்கப்பட்டிருக்கிறது. நாடக அரங்கங்களில் நடிப்பதற்கு இது தக்கதொன்றாகும். இதன் விலை அணு 4. வேண்டுவோர், K. S. Muthiah & Co., Silk House 287 Esplanade, Madras. என்ற விலாசத்திற் கெழுதிப் பெற்றுக் கொள்ளலாம்.

ஞானமிருதம் (No. 1-A.):—இது ஒரு பெரியார் ஆந்திரத்திற் செய்த சிறுநூலாகும்; க. அரங்கநாத பிள்ளையவர்களால் தமிழில் மொழிபெயர்க்கப்பட்டது; டக்குடர் ப்ருஹ்மஸ்ரீ இராமசுவாமி ஐயரவர்களாற் பிரசுரிக்கப்பட்டது. இதில் எல்லாச் சமயங்கட்கு மொப்பான நீதி, பக்தி, ஞான, வைராக்யங்களைப் போதிக்கும் வாக்கியங்களும், சன்மார்க்கத்தை மேற்கொள்வதற் குரிய உபாயங்களும், முக்குண லக்ஷணங்களும் முதலியன நன்கு விளக்கப்பட்டிருத்தலின், இது ஒவ்வொருவரிடமு மிருக்கத் தக்கது. இதன் விலை அணு 1. வேண்டுவோர் டக்குடர் இராமசுவாமி ஐயரவர்கள், No. 5, கோண்டலையர்வீதி, மிண்ட் பில்டிங் போஸ்டு, சென்னை, என்ற விலாசத்திற் கெழுதிப் பெற்றுக்கொள்ளலாம்.